உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

பாடியென வழங்கும்

# திருவலிதாயப் புராணம்.

(கத்திய ரூபம்)

இஃது

அஷ்டாவதானம்

பூவை-கலியாணசுந்தர முதலியாரால்



ஷை தேவாலய தருமகர்த்தாகிய

ப-தணிகாசல முதலியாரவர்களால்

சென்னை

தாம்ஸன் கம்பெனி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விகாரி௵ ஆடிமீ

1899.

உ

சிவமயம்.

# சிறப்புக்கவி.



## திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனப்

திருப்பூவனூர் வாசம்

## ஸ்ரீமத். சுப்பிரமணியத்தம்பிரான் சுவாமிகள்

அருளிச்செய்தது.

உலகனைத்து மும் புகழ்தொண்டை மண்டலமா ரினிதிலகு
 வொண்பதியாம் வலிதா யத்தி
னுயரியவா ரியபுரா ணந்தனைப்பாற் கடலினிடை
 யுறழமுதத் தமிழி லாக்கி
நலங்கொளுநல் லன்பரெலாந் தெவிட்டாதிங் கேயுண்ண
 நயமொழியி னளித்திட் டானை
நமவாயி லாநாய ஞானமரபி லவதரித்த
 நற்கீர்த்தி வளர்வே ளாளனை
வலமருவு மிலக்கணவி லக்கியநூல் பலதேர்ந்து
 மாணுக்கர் சூழ வாழ்வோனை
வைதிக சைவசித் தாந்தசாத் திரத்துண்மை
 மகிழுலகில் வழங்கு சீலனை
கலிநிறையு மகச்சமயந் தாபித்துப் புறச்சமயங்
 காலவாரச் செயுமொரா தீரனை
கவினபூவை யவதானங் கலியாண சுந்தரநற்
 கவிராஜ சிங்க மாதோ.

உ

சிவமயம்.

# சருக்க வட்டவணை





முற்றிற்று.

௧.

சிவமயம்

# திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

# திருவலிதாயத் தேவாரம்



பண் - நட்டபாடை

## திருச்சிற்றம்பலம்.

பத்தரோடு பலரும் பொலியம் மலரங்கைப் புனறூவி
ஒத்தசொல்லி யுலகத்தவர் தாந் தொழுதேத்த வுயர் சென்னி
மத்தம் வைத்த பெருமான் பிரியா துறைகின்ற வலிதாயம்
சித்தம் வைத்த வடியாரவர் மேலடையா மற்றிடர் நோயே.

படையிலங்கு கரமெட்டுடையான் படிறாகக் கனலேந்திக், கடையிலங்கு மனையிற் பலிகொண்டுணுங் கள்வ னுறைகோயில், மடையிலங்கு பொழிலின் னிழலவ் வாய்மது வீசும் வலிதாய, மடைய நின்றவடி யார்க்கடையாவினை யல்லறுயர் தானே (௨)

ஐயனொய்யனணியன் பிணியில்லவ ரென்றுந் தொழுதேத்தச், செய்யன வெய்யபடை யேந்தவல்லான் திருமாதோடுறை கோயில், வையம் வந்து பணியப்பிணி தீர்த்துயர்கின்ற

வலிதாயம், உய்யும் வண்ணம் நினைமின் நினைந்தால் வினைதீரு நலமாமே (௪)

ஒற்றையேற துடையானடமாடி யோர்பூதப்படை சூழப், புற்றினாக மரையார்த்து ழல்கின்ற வெம்பெம்மான்மட வாளொடு, பெற்றகோயிலுலகத் தொளிமல்கிட வுள்கும் வலிதாயம், பற்றிவாழு மதுவே சரணாவது பாடுமடியார்க்கே. ()

நந்தியொன்றி நினைவார் வினையாயின தீரப்பொருளாய
அந்தியன்ன தொருபேரொளியானமர் கோயிலயலெங்கும்
மந்திவந்து கடுவனொடுங் கூடி வணங்கும் வலிதாயஞ்
சிந்தியாதவவர் தம்மடும் வெந்துயர் தீர்த லெளிதன்றே. (௫)

ஊனியன்ற தலையிற் பலிகொண் டுலகத்துள்ளவரேத்தக்
கானியன்ற கரியின்னுரி போர்த்துழல்கள்வன் சடைதன்மேல்
வானியன்ற பிறைவைத்த வெம்மாதி மகிழும் வலிதாயந்
தேனியன்ற நறுமாமலர் கொண்டு நின்றேத்தத் தெளிவாமே.

கண்ணிறைந்த விழியின் னழலால் வருகாமனுயிர் வீட்டிப், பெண்ணிறைந்த வொருபான் மகிழ் வெய்திய பெம்மானுறை கோயில், மண்ணிறைந்த புகழ் கொண்டடியார்கள் வணங்கும் வலிதாயத், துண்ணிறைந்த பெருமான் கழலேத்த நம் முண்மைக் கதியாமே. (௭)

கடலினஞ்ச மமுதுண்டிமையோர் தொழுதேத்த நடமாடி
அடலிலங்கை யரையன் வலிசெற்றருளம் மானமர் கோயில்

மடலிலங்குகமுகின பலவின மதுவிம்மு வலிதாயம்
உடலிலங்கு முயிருள்ளளவுந தொழவுள்ளத் துயர போமே.()

பெரியமேரு வரையே சிலையாமலைவுற் றாரெயின மூன்றும
எரியவெய்த வொருவன்னிருவர்க்கறி வொண்ணாவடிவாகும
எரியதாகி யுறவோங்கி யவன வலிதாயந் தொழுதேத்த
உரியராகவுடையார பெரியாரெனவுள குமுள்ள்த்தோரே (௯)

ஆசியார மொழியார மண்சாக்கியரல்லாதவர் கூடி [௰
ஏசியீரமிலராய மொழிசெய்தவர சொல்லைப பொருளென்னேல
வாசிதீரவடியார்க்கருள செய்துவளர்ந்தான வலிதாயம
பேசுமார்வ முடையாரடியாரெனப பேணும பெரியோரே

வண்டுவைகும மணமல்கிய சோலைவளரும வலிதாயத்
தண்டவாணனடியுள குதலாலருண்மாலைத் தமிழாகக
கண்டல்வைகு கடற்காழியுண் ஞானசம்பந்தன றமிழ்பத்துங
கொண்டுவைகியிசை பாடவல்லார குளிர்வானத்துயர வாரே

**திருச்சிற்றம்பலம்.**

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பாடியெனவழங்கும்

# திருவலிதாயப் புராணம்.



## காப்பு.

### வரசித்தி விநாயகர்.

அரசித திராமுகமணைத தினிலுமேசெலவைபபவருக்கப
பரசிததிவாயநதொளிரவமரர்நணிபரிநதேததிபபாடியாட
வரசிசதிமிககளறுமபஃறளிசூழவலிதாயததமர்நதஞான
வரசிததிவிநாயகனையெநநாளுமேபணிநதுவநதிபபேமால.

### வலிதாயநாதர்.

பொலிதாயபூஙகொனறைநன்னீழலமாநதருளிபபுகழமலி
நத, பலிதாயமேனிநிகழமெயயனபாபணியேறறுபபணடை
நாளின, வலிதாயவினையகறறிநினைநதவையெலாமருளிமனனி
வாழும, வலிதாயநாதனிருசெஙகமலபபொறபாதமவாழதது
வோமால.

## தாயம்மை.

*சேயமமையுறமுகுவவுக்ரோளினிருபாஙகரினுமவிளஙகி னறு, பாயமமையறலபருகுமலேமகளவெணணலாமகளடண பசாகதிறைஞச, வாய்மைமலாநசருளாதருளயிருகடகணிப பாலவழஙகிககாககுக, தாயமமையினைபபரவியுமமைவினையிம மையினிறசாடிவாழவாம.*

---

## நைமிசாரணியச் சருக்கம்.

செநதாமரைபபூம பொகுட்டில அரசு வீறறிருககும சிருட்டி கர்ததாவாகிய பிரமதேவனிடததிற சனமாராககமாகிய சைவசமயாசார நெறியினரான சில முனிவாகள பூரவ காலததிற சென்று வணஙகித் தாஙகள தவஞசெயகறகுத தகக இடங தெரிவிகக வேணடு மென்று வேணடிக கொணடனா. நானமுகக்கடவுள ஒரு தருபபையினை நேமியாக (சக்கரமாக) வளைதது உருட்டிவிட, அசனபினனே ஞானததிற சிறநத முனிவாகள் சென்று அநத நேமிதஙகிய நைமிசவனததி லிருநதுகொண்டு அனநத கலயாணசுநதர குண சமபனனரான சிவபெருமானை நோககித் தவஞ்செயது கொணடிருநதனர். அககாலததில் அவவிடததில் வைதிக சிகாமணியாகிய வியாசரது மாணககா சூதமாமுனிவா நாவினுக கருஙகலமாகிய நமசிவய மநதிரததை யுசசரிததுச

கொண்டே வரக்கண்டு, பரமசந்தோஷத்தா லெதிர்கொண்டு சென்றழைத்துவந்து, ஓராதனத்தின்மே லெழுந்தருளச்செய்து அர்க்கியபாத்தியம் ஆசமனீய முதலியதந்து சமீபத்தி லிருந்து விண்ணப்பஞ் செய்வாராயினார் சிவபக்த சிரோன்மணியே! தேவர்கள் எப்போதும் அமுதத்தினையே விரும்புகிறார்கள்; அதுபோல நாங்கள் எப்போதும் சிவசரித்திரத்திலேயே ஆவலுடையவர்களா யிருக்கின்றோம். ஆதலின் தேவரீர் முன்னொருகாலத்தில் தேவாதி தேவனாகிய சிவபெருமானது தலமான்மியங்களைத் திருவாய்மலர்ந்தருளிய போது இரத்தினவனத்திற்குச் * சமீபத்தில், அன்பர்க்கு அகண்டசெல்வத்தினை யளித்தருளும் 'திருவலிதாய' மெனவோர் தலமுண்டெனச் சொல்லியிருந்தீர். அத்தலத்து மான்மியத்தினை யிப்போது விரும்புகிறோமென்றனர். சூதமாமுனிவர் கேட்டு அஞ்சலித்து ஆனந்தக் கண்ணீர்சோர முனிவர்களை நோக்கிச் சொல்லுவாராயினர். 'தவநெறியிற்சிறந்த பெரியோர்களே! அமுதபானம் நரைதிரைமூப்பைப் போக்குவதேயன்றி முத்தியைத்தருவதன்று. சிவதல மான்மியமோ, நரைதிரை மூப்பைத்தருவதாகிய தேகபந்தத்தை யொழித்து முத்தியைத்தரும் அதிசயத்தையுடையது. ஆகையால், இப

---

* வடதிருமுல்லை வாயிலுக்குக் கிருதயுகத்தில் இரத்தினவனம் என்றும் திரேதாயுகத்தில் 'வில்வவனம்' என்றும், துவாபரயுகத்தில் 'சண்பகவனம்' என்றும், கலியுகத்தில் 'மாலதி (முல்லை) வனம்' என்றும் பெயர்.

போது ஆதியநதமிலலாத சிவபெருமான அமர்நதருளும் அநதசதிருவலிதாய மானமியததினைச சொல்ல நோநத என புணணியமே புணணியம நாயேனை யடிமையாககொண்ட திருவலிதாய நாதனது சரணாரவிநதஙகளைச் சோமவாரமாதி விசேட தினஙகளிற பூரணபகதியுடன தொழுது வணஙகு கினறவர்கள சகலசமபததுடனே யுலகில பலநாள வாழ்நது பினனா நவரததினசோதி விமானத்தினமே லேறிக்கொணடு அரமபையா வெணசாமரைபபோடவும, அமரர்கள போற றவும, பலவாததியஙகள மெலல முழஙகவும, தேவேநதி ராதி தேவாகள இவவளவு வைபவம நமக்கிலலையே யெனறு பொறுமை யடையவும, மகிழநது செனறு சிவலோகததை யடைநது சிவானநதபோகத்தை யனுபவிப்பாரகள. இதத லதிறசெயயும தருமமொனறு கோடியாகவளரும. இததல ததினமகிமை முழுவதினையும் எனனொருநாவாற சொல்லுந தரமனறு. ஆயினுஞ் சமபுசபத வாசசியார்ததராய விளங குஞ சிவபெருமானாகிய வலிதாயநாதன திருவடிகளை என மனதிற சிநதிததுக கூடியவரையில சொலலுகினறேன; ஒரு மனதாய்க் கேளுஙகளெனறு போதசாகரமாகிய சூதமாமு னிவா சொலலத தொடஙகினர்.

**நைமிசாரணியச் சருக்க முற்றிற்று.**

---

## பரத்துவாசர் பூசித்த சருக்கம்.

சிவானந்தச்செல்வர்களே! சகலகலைகளினும் வல்லவ்ராகிய உதத்தியர் என்னுமோர் முனிவரும், அவரது மனைவர முகத்தை கருரிய கறபிற்சிறந்த மமதையென்பவளும் இல்லறவா முகதை நெறிதவறாமல் நடாததுவருகையில், புததிரப்பேறி னறிய பரிபூரண சசசிதானநதப பிழமபாகிய சிவபெருமா னைப நோக்கித தவஙகிடகக, மமதையெனபவள் கருபபம வாயநதனள அதிருப சவுநதரியவதியான அமமமமதயின கரியகூநதலினையும், பவளவாயினையும், மதுரமான சொலலி னையும், சேமறபடாநத தனஙகளினையும், தளிரபோனற கைகளினையும், விசாலமான அலகுலினையும், உததிய முனி வரின தம்பியாகிய வியாழ முனிவா கணடு அவள தனி ததிருஙகுஙு சமயத்தில அவளைச சமீபிதது இஙகிதசரச சலலாப போக வாரத்தைகளை நயமாகபபேசித தனனை யணையுமபடி இரககததுடன வேணடிக கொணடனா. அவள, தனது மைததுனனை நோக்கிக கொழுநதனே! நீ இஙஙன நினைக்சல தகாத காரியம. இக்குலல நான கறபிழநதவளாகி விடுநலே யனறி, உனறனுககும உனறமையனுககும் பகை யினையும. தமையனுக்குப புததிரபபேறிலலாத காலததில, தமபியைக் கொணடு புததிரனை உணடாககிககொளளலா மெ னல இவயுக தருமமாயினும நானிப்போது உன தமையனுக கே கருபபம வாயநதிருககினறேன. ஆதலின,அடாத காரியத்

கிற பிரவேசிப்பது அழகன்று பாவத்தினையும் பழியினையுந் தேடிக்கொள்ளுதல் நம்மரபிற்கு நலமாமோ என்றனர். வியாழ பகவான் தனது மதனியார் வார்த்தைகளைச் சிறிதுங் கவனியாது, மேல் விழுந்து வலாத்காரமாகப் புணர்ந்தனர். அப்போது, மமதையின் கருப்பத்திலிருந்த சிசுவானது சிவானுக்கிரகத்தா லுற்பத்தியா யிருப்பதால், இவ்வுண்மை தெரிந்து கொண்டு, வியாழ முனியின் வீரியத்தையுள்ளே பிரவேசிக்க வொட்டாது தடுத்து வெளிப்படுத்தி விட்டது. வியாழ முனிவரிது தெரிந்து கருப்பத்திலிருக்கும் குழந்தை குருடாகப் போகக்கடவது என்று சபித்தனர். வெளிப்பட்ட வீரியம் தேவ குருவாகிய வியாழ பகவானுடைய தாகலின், அது வீணாகாதபடி தேவர்கள் ஒரு பரத்துவாச பட்சியினை * யுண்ணும்படி செய்தனர். அப்பறவையினின்றும் பரத்துவாசமுனிவர் † பிறந்தனர். மமதை வயிற்றினின்றுங் குருடராகப்பிறந்த தீர்க்கத முனிவர் சில நாளைக்குப் பின்னர், தனது சிறிய தந்தையராகிய வியாழ முனிவரை நோக்கித் தந்தையே! நீ சிறிதும் விவேகமின்றி யென்றாயைப் புணர்ந்ததல்லாமல், என்னையும் அந்தகனாகப் போம்படி சபித்தாய்.

---

* பரத்துவாசம் = கரிக்குருவி இது வலிய னென்றும், கருங்குருமா னென்றும் வழங்குகிறது

† சதாசிவ மூர்த்தியினது திருமுகங்களிலுண்டான பஞ்ச பிரம விருடிகளிலொருவராகிய பரத்துவாசர் இவரன்று.

ஆகையால், உனமனைவி யுன மாணுக்க * னொருவன பால புததிரனைப பெறறுக் கொளளக கடவள எனறனா பினபு பிரசஸபதியாகிய வியாழ பகவானுககுப பிறநத பா ததுவாசா பறவையினிடமாக வுதிதத தனது செனமததினுக குக காரணமான வினையினை நினைநது நினைநது துககிதது தலயாததிரை செயயககருதிப, புணணிய பூமியாகிய பரத கணடததிலுளள சிவதலஙகளை யெலலாந தரிசிததுக கொண டே தெனறேய நோக்கி வருகையில, அருமபுகளையு மலாகளையு முடைய சோலைகளாலும, சணபக விருடசஙகளாலும, வரி சை வரிசையான தெனனமரஙகளாலும், வாழைகளாலும சூழபபடட தாமரை மிகுநதிருககும சுனைகள நிறைநத வொ ரு வனததினைக கணடு அதில வேத ரூபமாகிய கொனறை விருட்சத்தினடியிற சுயமபுவாக வெழுநதருளியிருககு மொரு சிவலிஙகப பெருமானைத் தரிசிததவுடன றனது மனதிலி ருநத சஞ்சலமெலலா நீஙகி, ஆனநதமே லிடக்கணடு ஆச சரியமடைநது அவ்விடத்திலோா தீரதத முணடாக்கி வெகு காலம் அப்பெருமானைப பூரண பததியுடன பூசிததுக கொ ண்டிருநதனர். ஓர்நாள, சர்வ சகதகாரணப பிரபுவாகிய சிவபெருமான் தருமதேவதையான இடபவாகனததினமேல மாங்குயில்போல மதுர வசனங்களை வசனிககு மலைமகள

---

* இசசரிததிரம திருவானமியூரப் புராணததுச சநதிரன காம நாசப்படலததிற் காணக.

சமேதராய் விநாயகர், சுப்பிரமணியர், திருநந்திதேவர், முனி
வர்கள் சூழக் காட்சிகொடுத்தருளினர். அரியயற்கரிய திரு
வடிகளைப் பரத்துவாச முனிவர் தரிசித்து அடியற்ற மரம்
போற் கீழேவிழுந்து எழுந்து வலம்வந்து கூத்தாடி இருகரங்
களையு மஞ்சலித்து, ஆனந்தபாஷ்பஞ்சொரிய, ஏ சங்கரா!
சதாசிவா! சம்போ! சசிதரா! கங்காதரா! கங்காளா! கண்
ணுதலோய! கயிலையாளி! கறைமிடற்றோய்! காமநாசா!
காலகாலா! போற்றி போற்றி யென்றிரந்தவுடன், அடியார்
க்கருள்சுரக்கு மண்ணல், "குழந்தாய்! நின் பூசையை ஏற்
றுக் களிப்புற்றனம் உன்மனத்தி லுண்டாயிருக்கும் கவலையை
யொழிக. உன் பிறப்பை யுன்னி யினியாரு முன்னை யிகழார்
கள். நீ முனிவர்கட்குள் நாயகமாக விளங்குக. அரசர் குரு
வாகத் துரோணுசாரியனென்னு மோர் மைந்தனைப்பெற்
றுச் சுகமாக இருக்கக்கடவை" என ஆசிமொழிந் தந்தரு
ளினர். பரத்துவாசர் சுவாமியை நோக்கிப் "பெருமானே!
அடியேனுடைய பூசையினை யுரிமையாக ஏற்றுக்கொண்ட
தேவரீருக்குப் 'பலிதாய நாதன்' என்றும், இவ்விடத்திற்குப்
'பலிதாயத்தலம்' * என்றும், என்னுலெடுத்த தீர்த்தத்திற்குப்
'பரத்துவாச தீர்த்தம்' என்றும் வழங்கவேண்டும். இத்தலத்

* பலி = பூசை. தாயம் = உரிமை. பலிதாய நாதர் = பூசையை யுரி
மையாகக்கொண்டவர். பலிதாய மென்றது - தமிழில் வலிதாயமென
றாயிற்று. வலியன் + தாயம், வலிதாயமெனினும் பொருந்தும், வலி
யன் = பரத்துவாசர்.

திற்கு வந்து தரிசிப்பார் எத்தகைய பாவிகளேயாயினும் அவர் பாவங்களை யொழித்துச் சகல வைசுவரியங்களையும் அவர்களுக்குக் கொடுத்தருள வேண்டும்" எனப்பிரார்த்தித்தனர். "அவ்வண்ணமேயாகுக" வென் றருள்சுரந்து சாமகண்டருடைய சிவபெருமான் பெருங்கருணைக் குடி கொண்டிருக்கும் பெருமாட்டியுடனே அந்தர்த்தான மாயினர்.

## பரத்துவாசர் பூசித்த சருக்க முற்றிற்று

---

# தேவகுரு காமநாசச் சருக்கம்.

சைவாசாரத் துல்லியர்களே! தேவர்கட்கெல்லாம் ஆசிரியத் தலைமைபூண்டு விளங்கும் பிரகஸ்பதியாகிய வியாழபகவான், தனது தமையன் உதத்திய முனிவரது மனைவியாகிய மமதையைச் சேர்ந்து பரத்துவாசரைப் பெறுவதற்குக் காரணமாக விருந்ததனது காமத்தினை யெண்ணியெண்ணி மனத்துயர் மிகவடைந்து அனுதாபப்பட்டுப் பரிகார மொன்றுந் தோன்றாது சிந்தா குலத்தை யுடையரா யிருக்கையில், அச்சமயம், அங்குச் சிவபெருமான் றிருவுருக் கொண்டாற்போல, முழுநீறுபூசிய மார்க்கண்டேய முனிவர் சமீபிக்க, உடனே வியாழமுனிவ ரெழுந்து அடிதொழுது, கைகூப்பி நின்றிட,

ஆசீர்வதித்து, " ஓ தேவ குருவே! நின் முககமலம் வாட்ட முற்றிருப்ப தென்னை ?" என்றனர். தாரகைத் தலைவனும் பிரகஸ்பதி நடந்த விருத்தாந்தங்களை யெல்லா மறிவித்து, "அப்பா! உன்னை என்னிஷ்ட தெய்வந்தான் கொண்டுவந்து விட்டது. எனக்கு நீயே துணைசெய்ய வேண்டும்" என்று கூறக்கேட்டு, மற்லியைவென்ற மார்க்கண்டேய முனிவர்சொல்லுவாராயினார், "முனிவரனே! நீ என்ன காரியஞ் செய்தனை? ஒரு பெண்ணின் கற்பினைக் கெடுக்கும் பாவமோ, கொடிது! கொடிது! காமத்தினை யடக்கி யாளபவனே ஞானி யெனப்படுவன். காமத்தால் இந்திரன் ஆயிரங்கண்ணானான். காமத்தால் குபேரன் கண்ணிழந்தான். காமத்தால் நகுடன் உரு மாறினன். காமத்தால் கண்ணன் பலப்பிறவியடைந்தான். ஆதலின் காமத்தால் விளையுங் கெடுதிகள் பல. உனக்குக் காமத்தாலுண்டாகிய பாவத்தினை யொழிக்க வோர் சூழ்ச்சி சொல்லுகின்றேன் கேட்பாயாக. இப்பாவம், சமஸ்தசரீர அந்தராத்மாவாக விளங்குஞ் சிவபெருமான் அருள் கிடைத்தாலன்றி யொருபோது நீங்காது. அத்திருவருள், மெய்யன்புடனே பூசைசெய்தலால் வரும். அப்பூசை சிவலிங்கப் பூசையேயாம். அப்பூசை செய்தற்குரிய இடம் சிவதலங்களேயாம். அத்தலங்களில், விருத்த க்ஷீரநதி தீரத்தில் ஒப்புயர்வில்லா தோங்கும் திருவலிதாயமே மிகச்சிறப்புடைத்து. அத்தலத்துப்பெருமானை பூசைசெய்து தேவர்களும் முனிவர்களு மற்றுமியாவரும் பெரும்பேறுபெற்றுப் பேரின்ப மடைந்தினி

துய்ந்தனர் 'மோட்சத்தினைக் கைவல்லியமாகப் பெறுதற்கு இத்தலத்தினைக் காட்டிலும் வேறுதலமுண்டோ' இல்லை! இல்லை!! அத்தலம், தென்றேயத்தில் இரத்தின வனத்திற்கும் * வேல்வனத்திற்கும் மத்தியிலுள்ளது. அங்குச் சென்று பூசிக்கக்கடவை" எனக்கூறி விடை பெற்றேகினர்.

தேவகுருவானவர் சிவபத்தியிற் சிறந்த மார்க்கண்டேயர் கட்டளைப்படி நவரத்தின மயமாய் விளங்கும் திருவலிதாயம் அடைந்து, நீராடி, நித்தியானுட்டானம் முடித்துத் தேகமெல்லாம் நீறணிந்து, நெற்றியில் திரிபுண்டரமிட்டுக் கண்டமுதலிய அங்கங்களில் உருத்திராக்க மாலிகை தரித்து, மாசில்லாது புகழ்பெற்றோங்கும் திருவலிதாயத்தி லெழுந்தருளியிருக்குஞ் சோதிலிங்கப் பெருமானை இதயார விந்தத்தில் ஆவாகனஞ் செய்து, வந்தனை வழிபாடு புரிந்து கொண்டிருக்கையில், திருவருள் சுரந்து, உலகமாதாவாகிய உமையம்மையுடன் சம்பு சப்தவாசயனான் சிவபெருமான் எதிரில் தோன்றிக் காட்சி கொடுத்தருளினர். திருமாலும் பன்றியாச் சென்றுணராத் திருவடியைத் தேவகுரு தரிசித்து அனலிற் பட்டமெழுகுபோன் மனமுருகித்தொழுது சொல்லுவாராயினர்.

"மாலயனறியா மாதேவா! உன்பாதமே கதி. பரசிவனே- பரஞ்சுடரே - பரம்பொருளே - பரஞ்சோதியே - பசுபதியே

* வேல்வன மென்பது திருவேற்காட்டினை

சரணம, சரணம எம்பெருமானே, சகலவானம கோடிகட்கு நீ தநதை, பார்வதி - தாய - அனபான தாய தநதையாகளிடத் தில தஙகள குறறஙகளேச சொலலிக கொளவதறகு நாணபப வோகளுண்டோ? இலலே. ஆகலின, அமமையபபராகிய உங் களிடததில எனகுறைகளே முறையிடடுக் கொளவதில நான ஏன வெட்கபபட வேணடும? பெருமானே! நானறியாது செய்த காமததால உலகம்பழிதது எனனே யொழிததுவிடாத படி யெனமேல கருணே வைததுக காதசருளவது உனபாரம். தநதையே! தாயே! தஞசம, தஞசம, எனறனா. சாவலோக ஆதாரபூதராகிய பெருமான புனனகை செயது, அனப! உன பாவம உனனேவிட் டொழிநதது. இனித தேவாக ளெல்லாம் உனனேத தஙகள குருவெனக கொணடாடுவதிற றடையிலலே. சுகமாகவாழககடவையென று திருவாய மலாநதருளிசசிவலிங் கத துணமறைந்தருளினர்.

தேவகுரு காமநாசச் சருக்க முற்றிற்று.

## கேசவன் பாவநாசச் சருக்கம்.

சிவானுபூதி மானகளே! தாமரையாசனததில வீற்றிரு க்கு நானமுகக் கடவுளின புததிரனுகிய தககன, தனக்குண் டாயிருநத அதிகாரச் செருக்கினுல, அகில லோகநாயகனு கிய சிவபெருமானே விலக்கித திருமால முதலிய தேவர்கள் சூழ வொரு வேளவி செயயத் தொடஙகினன். அதனேயறிந்த

நாரதமுனிவர் வெள்ளியங்கிரியை யடைந்து விமலனிடத்தில விஞ்ஞாபனஞ் செய்தனர். இதனைக் கேட்டுக் கொண்டிருந்த அமுதம் போனறவளாகிய உமாதேவியார தனது தநதையாகிய தக்க னடத்தும் வேள்வியைப பார்க்கும பொருட்டுத் தனது நாயகனிடத்தில விடைபெற்று வேள்விசசாலையை யடைந்தனர். தருக்கே யுருவாயமைநத தககன் அமமையாரைக் கண்டு கோபித்துப பறபல விதமாகப பரஞ்சோதியாகிய பசுபதியை நிநதனை செயதனன். கேட்டவம்மையார பொருதவராகி "ஏ தககனே! அகனி சோமேநதிர விட்டுணு வாதி சர்வதேவ தஞரப்பூசனுகிய பெருமானை நீ பழித்தமையிஞல், உன் வேளவியானது சுடுகாடாகக் கடவது. உன றலை யறுபட்டுப போகககடவது" எனறு சபித்து, அகனியை வளர்த்தியதில் மூழகித தனனைப் புததிரியாகப் பெறவேணடிச் சிவபரஞ்சோதியை நோக்கித தவங்கிடக்கும இமயவரசன் மகளாக அவதரித்தருளினர். பின்பு, ததீசியாதி சைவமுனி புங்கவாகள் தக்கனைநோக்கி, "ஏ! பிரம புததிரனே! மறையனைத்து மகதேவனைக் காதபதியெனறும, மேதபதியென்றும், அத்வராஜனென்றும், எக்ஞபதியெனறும் பல நாமங்கள் பாராட்டி யுதகரிததிருததலை நீ யறிந்தாயில்லையோ? எவன் அன்னியமான ஈன தெய்வங்களோடு சமானமாக ஒரு வார்த்தையாவது மகாதேவரைப் பேசுவானே, அந்ததுராமதியே சண்டாளனுவனன்றி, உலகப் பிரசித்தியால் சண்டாள னென்றழைக்கப் படுமவன சண்டாளனுகான் என்னும்

புராணவசனம் கேட்டதில்லையோ? சுரசிரேஷ்ட பிரபுவாகிய ஏ ருத்திரமூர்த்தி! உன்னை யித்தரதெய்வங்களோடு நமஸ்காரங்களிலும், அவல ஸ்தோத்திரங்களாலும், ஆவாகனங்களாலும் கோபிக்கச் செய்யோம் என்ற சுருதியினையும் கேட்டிலையோ? அந்தோ! என்பதி சிவனேயென் றறியாதவன் தலையிடரு றுமே ஆசையால் இனியேனும் அகிலலோகமுந் தொழுமெங்க ளாண்டவனுக் கவிசளிப்பாயாக" என்று பல புத்தி கூறியுங் கேளாதவனுய் மேலு மேலு மிகழ்ந்தனன். இவற்றையெல்லாம் நந்தியெம்பெருமான் வாயிலாகக் கைலாசபதி யறிந்து கொண்டு வீரபத்திரக் கடவுளைத் தனது பால நேத்திரத்தினின்று முண்டாக்கி, "ஏ வீரனே! நம்மை நிந்தித்துத் தக்கன் வேள்வி புரிகின்றனன். நீ அவ்விடஞ் சென்று நமக்கு அவியைக்கேள். கொடுத்தால் வந்து விட்டுக்கடவாய் மறுத்தானேல், யாகத்தை யழித்து, அவன்றலையை யறுத்து, அவனுற்ற தேவர்களைத் தண்டஞ் செய்து வருவாய்" என்று ஆஞ்ஞாபித்தனர். உடனே வீரபத்திரர் தந்தையாரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு வேள்விச்சாலையை யடைந்து தக்கனை நோக்கி, "ஏ தக்கனே சர்வைஸ்வரிய சம்பன்னரான, சிவபெருமானுக்குரிய அவிப்பாகத்தைக் கொடு" என்றனர். அதற்குச் சிறுவிதியாகிய தக்கன் பின்வருவது தெரியாமல், வடவா முகாக்கினி போற் சீறிச்சினந்து, "அச்சுடலை யாடிக்கு அவிப்பாகங் கொடேன்" என்றனன். அங்கிருந்த தேவர்களு மவுன முற்றிருந்தனர் உடனே வீரபத்திர மூர்த்தி

ஆக்கிரமித்து வேள்விச் சாலையிற் பிரவேசித்துப் பிரமன்றலை நான்கு மதிரும்படி குட்டினர், அவன் மனைவி சரஸ்வதியின் மூக்கை யறுத்தனர்; குயில் வடிவங்கொண்டு ஓட 'வாரம்பித்த இந்திரனை வாளால் தகர்த்தனர், நமனைக் கொன்றனர், சந்திரனைப் பாதத்தாற் றேய்த்தனர், சூரியனது எண்ணுன்கு பற்களையு முதிர்த்தனர், அக்கினியின் கரங்களைத் துணித்தனர். இலக்குமியி னிளமுலைகளை யீர்த்தரிந்தனர், தக்கன் சிரங்கொய்தனர். இவற்றை யெல்லாங் கண்ட நாரணன் அதி கோபங்கொண்டு காசசித்து, கருடவாகனமேறி, எதிரில்வந்து தனது சக்கராயுதத்தினைச் சுழற்றிப் பிரயோகஞ் செய்தனன். வீரபத்திர சுவாமி ஓர் ஊங்காரஞ் செய்து, அச்சக்கரத்தினைத் தனது இடது கரத்தால் வாங்கி வீசி யெறிந்தனர். அதனை யொரு பூதம் வாயிற் போட்டுக் கொண்டது. பின்னர்த் திருமாலைப் பிடித்துப் பாசத்தாற் கரங்களைக் கட்டி, காலில் விலங்கிட்டு, அவ்வேள்வியிலிறந்து கிடக்கிற பிணங்களைச் சேர்த்துப் பிணித்து, அவன்றலைமேலேற்றி, வேள்விச் சாலையை மூன்று தரம் வலம் வரும்படி செய்தனர். அச்சமயத்தில், கருணா சமுத்திரமாகிய கண்ணுதற்கடவுள் இடபவாகனரூடராய் அவ்விடம் எழுந்தருளினர். சுவாமியைக் கண்ட விஷ்ணுமூர்த்தி நாணமடைந்து, பயந்து நடுநடுங்கிப் போற்றினன், "அப்ரமேய, அநாமய, நிர்க்குண, நிரஞ்சன, பிரணவ சொரூப, நாமரூபரகித, கைலாசசிகரவாச, உமார்த்தகிருத சேகர, மிருகவஸ்த, பஸ்ம தூளித விக்ரக, பஞ்சாநந, சந்திர

சேகர, வியாக்ர சர்மாம்பரதர, பஞ்சகிருத்திய பராபரனே, ஆண்டருளும், அடிமையை ஆண்டருளும்! அறியாது செய்த பிழையை மன்னித்தருளும்'' என்று பலவாறாகத் தோத்திரஞ் செய்தனன். பரம பதியாகிய பரமேஸ்வரன் மனமிரங்கிக் கருணை கூர்ந்து சொல்வாராயினார். "மாலின் சிகருண்டு மயங்கும் ஏ மாயவனே! நீ நம்மைச் சிறிதுந் தெரிந்து கொள்ளாது, மற்றைய சாமான்ய தேவர்களைப்போல நீயும் மத்தகன வேள்விச்சாலையிற் சேர்ந்திருந்தா யாகலின், வேள்விச் சாலையிலிருந்த தேவர்களின் கேசங்களை (பிணங்களை) சுமக்கப் பெற்றனை. இதனால், இன்று முதல் நீ யெல்லாராலும் 'கேசவன்' என்று அழைக்கப்படுவாய். அன்றியும், நம்மை நிந்தித்த துஷ்டனின் சினேகத்தை விரும்பியதால், உனக்கு நேர்ந்த பாவத்தினை யொழிக்கக் கேசவனென்னும் பெயருடன் பூமியிலே சென்று, நாமிகவும் விரும்பத்தக்குந்த திருவலிதாய க்ஷேத்திரத்தினை யடைந்து நமது அருட்குறியைப் பூசிக்கக்கடவாய்'' என்று கருணை செய்து, வீரபத்திரரைக் கொண்டு மற்ற தேவர்களைப் பிழைப்பித்துப் பிரமன் கேட்டுக் கொண்டபடி தக்கனை யாட்டுத்தலையுடன் எழுப்பி, இமய மலைக்குச் சென்று, பார்வதி தேவியாரை மணந்து, கைலாயத்திற் கெழுந்தருளினார்.

பின்னர், செகசென்மாதி காரண வஸ்துவாகிய சிவபெருமானது திரு ஆஞ்ஞையின்படி கேசவனெடிய மதிலாற் சூழப்பட்ட திருவலி தாயத்தலத்தினை யடைந்து, தீர்த்தமாடி, விபூதி உருத்திராட்சந் தரித்துப் பூசைக்கு வேண்டு முபகர

ணங்களாகிய பீதாம்பரம், இரத்தினுபாணம், சந்தனம், திரு மஞ்சனம, தூபம, திருப்பள்ளித்தாமம், தீபம, பஞ்ச கவவி யம், கனிகள, தேன, திருவமுது சேகரித்துச சிவாகமப்படி ஆவாகனம, தாபனம, சந்நிதானம, சந்நிரோதனம், அவகுண டனம, தேனு முத்திரை, பாத்தியம, ஆசமனீயம, அாக்கியம, புட்பதானம், தூபம, தீபம, நைவேத்தியம், பானீயம, ஆராத திரிகை, சபசாபபணியாகு சோட சோபசாரஞ்செய்து, உரை தடுமாற எனபு நெகக்குருக உடலெலா மெனமயிரபபொடிபப ஆனநதக்கணணீா பெருக அஞ்சலித்து, மோடச விதாயமான பஞ்சாக்கரஞ் செபித்து, வணங்கிக்கொணடு திருமபி, அத்தல த்தினுக்குச சிறிது தூரத்திற குணதிசையிலொரு பனன சாலே யேறபடுத்தி, அதிறறங்கி, நாடோறுங காலேயிலு மாலே யிலுஞ்சென்று திருவலிதாய நாதனே வணங்கிக் கொண்டிருந தனர். ஓர் நாள, "கேசவனே, நீ செய்த பாவமுன்னேவிட்டு விலகியது" என்று அசரீரிகேட்ட மாத்திரத்தில, கங்குகரைகா ணுத ஆனந்தங் கொணடவராய அடியற்ற பனேபோல கீழே வீழ்ந்து எழுந்து தோத்தரித்து விடைபெற்றுச சென்றனா

திருவலி தாயத்திற்குச சமீபத்தி லக்கேசவனறங்கிவாழ்ந்த * கோயிலுக்குச் சனிவாரந் தோறுஞ் சென்று, கேசவ ஆதி கேசவ, ஆதிகேசவப பெருமானே, நாராயண, ஆதிநாராயண,

* இக்கோயில கொண்ணூரிலுள்ள ஆதிகேசவப் பெருமாள ஆலய மேயாம். இக்காலத்தில தாமோதரப் பெருமாள ஆலய மெனவழங்கி வருகிறது. தாமோதரனும் சிலகாலம் அங்கிருந்தமையினுல

ஆதிநாராயணப் பெருமானே, தேவ, வாசுதேவ, வாசுதேவப் பெருமானேயென்று வந்தனை வழிபாடு செய்யப் பெற்றவர்கள் பசியாற் பீடிக்கப்படாமல் எந்நாளும் அறுசுவையோடுங் கூடிய பிரசாதங் கிடைக்கப்பெற்று வாழ்ந்து, பின் வைகுந்தப்பதவியினைப் பெறுவார்கள். இவ்விடத்தில் துவாபரயுக முடிவிற் குமோதரனுருஞ் சில காலந் தங்கிவாழ்ந்து வலிசாய நாதனை தரிசனஞ் செய்துகொண்டிருந்து சென்றனர்.

**கேசவன் பாவநாசச்சருக்க முற்றிற்று.**

---

## அனுமா ரபராதமன்னிப்புச் சருக்கம்

சிவகாருண்ணிய முனிவர்களே! பூர்வத்தில் இலங்கைக்கதிபனான இராவணன் சன்னியாசிவேடம் பூண்டு, தண்டகாருண்ணியத்தில் இரவிகுலத்தோன்றலாகும் இராமன் பத்தினியாகிய சீதாபிராட்டியைப் பகரித்துக்கொண்டு இலங்கைக்குப் போய்விட்டான். வீராதிவீரனாகிய இராமன் பெண்டிழந்துதன் றம்பி இலட்சுமணனுடன் ஏங்கிக் காஞ்சியிற் சென்று, மறையுருவமைந்த மாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பர நாதனைப் பணிந்து பாசுபதாஸ்திரம் பெற்று, கிஷ்கிந்தையைச் சேர்ந்து, சுக்ரீவன் சேனையுடன் போய், சேதுபந்தனஞ்செய்து கடலைக் கடந்து, இராவணாதி யசுரர்களைக் கொன்று, சீதையைச் சிறைமீட்டுக்கொண்டு திரும்பிக் கந்தமாதனத்தில் வந்தவுடன்,

இராவணனது பிரமகத்தியானது இராமனைச் சூழ்ந்துகொண்டு இமைப்போது நீங்காமல் உம்மென்னும், தனது மார்பினைத்தட்டும், முகத்தினைச் சுளித்துக்கொண்டு சண்டைக்கு வரும், ஆரவாரஞ்செய்யும், உதட்டினைமடிக்கும், கூரியபற்களை நெறநெறவெனக் கடிக்கும், கீழேவிழும், மேலேயெழும்பும், என்னை யெதிர்ப்பவ ரார்டா வென்னும், வாடா இந்த மானிடனை யின்றே கொன்று தின்றேப்ப மிடுவேனென்னும், அட்டகாசஞ் செய்யும், கோபிக்கும், என்னைப்பகைத்து உய்யவல்லவ ரார்டா வென்னும் இதனைக்கண்ட இராமர் முகம் வாடி, "தம்பீ, தம்பீ, இலட்சுமணா! இஃதென்னை? இராவணனுபத்திரவம் பண்ணுகின்றனனே" என்றனர் "அண்ணா, அஞ்சவேண்டாம். அரக்கனன்றோ யிறந்தனன்" என்றான் இலட்சுமணன். இராமர் நடுங்கி, "ஜானகி, ஜானகி! இதுவென்னை! பத்துத்தலையன் பதறச்செய்கின்றனனே" என்றனர். "சுவாமீ! பாவி முன்னமே படுகளத்திற் பட்டொழிந்தனனே" என்றனள் சீதை. இராமரொன்றுந் தோன்றுதவராகித் திகைதிகைத்துத் திகிற்பட்டு வாயவரண்டு நடுநடுங்கி நான்குபக்கங்களிலுந் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்தனர். அச்சமயம், அவ்விடத்தில் திருநீற்றொளி திகழும் அதிசயத் திருமேனி யுடையராய், சிவகதா சங்கீர்த்தன சீலராகிய சில முனிகுமாரங்கள் வந்து இராமரைக்கண்டு, "ஏ இராகவ, அஞ்சற்க நீ கொன்ற இராவணன் இராக்கதனே யாயினும், அவன் பிரமகுலத்தில் வந்த புலத்தியன் பெயரனாதலின்,

பிரமகத்தியாகவந்து பீடிக்கின்றனன். அதனையொழிக்க வோருபாயம் கேட்பாயாக. திருக்கைலாயத்தினின்றும் ஓர் சிவலிங்கப்"பெருமானைத் தருவித்து, இவ்விடத்தாபித்துப் பூசிப்பையேல், அது இன்னே நின்னைவிட்டு விலகும்" என்றனர். இராமர்கேட்டு மனமகிழ்ந்து இக்காரியம் முடிக்கவைப்பான் புஜபல பராக்கிரம சாலியாகிய அனுமானொருவனேயென வெண்ணிக் கூறுவாராயினர்:

"அனும, சீதாசோகவிநாச! இப்போதெனக் குண்டாயிருக்கும் ஆபத்தினின்று நீங்க, திருப்பாற் கடலின்முழுகு மாறிப் பின்னிடவெண்சோதிவிரிக்குந்திருக்கயிலாயத்திற்குச் சென்று அருட்குறியொன்றினை யுடனே கொண்டுவரக்கடவாய்" என்று இராமர் சொல்லியவுடன் வாயுவின் ஔரச புத்திரனாகிய அனுமான் வெள்ளியங்கிரிக்குச் சென்றனர். அவ்வனுமார் வருதற்குச் சிலநாள் தாமதப்படலும், இராமர் மாதவர் கட்டளையின்படி எழுந்து நீராடி, நித்தியானுஷ்டானம் முடித்து, கங்கணங்கரத்திற்சேர்த்து, விபூதி யுருத்திராட்சம் புனைந்து, மிதுனமாதம் சுக்கிலபட்சம் புதவாரம் அஸ்தநட்சத்திரம் இடபலக்கினம் கூடிய சுபதினத்தில், தனது மனைவியாகிய சீதாபிராட்டியார் தமது கரங்களாற்றிரட்டிக் குவித்தமைத்த* வாலுகலிங்கத்தைச் சோடசோபசாரத்துடன் பூசித்து, பிரதட்சண நமஸ்காரம் பல்லாயிரந்தரஞ்செய்து, பலவரம்பெற்று, தன்முன்னின்றும் பிரமகத்தியினைப் பிலத்தில் வீழ

* வாலுகம்=மணல்.

த்தி, அவ்வாயலையடைந்து, அதனமேல வைரவக்கடவுளை தாபிதது, மனம்பூரிததுச சிவததியானத்துடன எழுநத ருளியிருநதனர்.

இதுநிறக, திருக்கயிலாயத்திற்குச் சென்ற அஞ்சனுதேவி மைந்தனுகிய அனுமாா, வெண்ணிலாக் கிரணமபொழியும திருமேனியையுடைய நநதியெமபெருமான சரோருகச சரணிறருழுநது, சிவலிஙகமொன றினைப பெறறு, கநதமாதனம வநதுசோநதவுடன. முனனமே இராமராலசிவலிங்கநதாபித்துப பூசிததிருககக்கண்டு வியசனமுறறு, இரகுநநதரைநோககி, "ஐய! எனனகாரியஞ் செயதீா! அடியேனசெயத குறறமியாது! பெணணுசையால சுகரீபன் உமமைச் சினேகஙகொண்டான்; மணணுசையால விபீஷணன உமமைசசரணடைநதான. நானோ தேவரீா திருததொண்டு ஒன்றினையேகைபபிடித்தேன எனனை இஙஙனஞ செயதலழகாமோ" என்று கேமபியழுதனன. சக்ரவாததிக் திருமகனா அனுமாா முகநோககி. "மாருதிமைநத, பெரியோர் குறித்த சுபமுகூாததம தவறுதபடி செயயவேண்டி நேரிடடது, வேறொனறு நினைததிலேன. நானருபித்த இராமலிங்கத்தின முனனா நீ கொணாநத சிவலிஙகததினைப் பிரதிட்டை செய்துபூசைசெய் இலலையேல, என்னாற் பிரதிட்டித்த இலிங்கததினைப்பெயர்த்து நின்கையுறற பெருமானை அவவிடத்திற ருபிபபாயாக" என்றனர்.

வாயுவின் மைநதனை அனுமார் கேட்டவுடன ஆனநதங் கொண்டு கிளமபி, இராமலிங்கத்தினைத் தன னிருகரங்களாலும பிடித்தசைத்து மசையாததைக்கண்டு தறபோதமுறறுத் தன வாலாற பலவலயஞ் சுற்றித் தன முழுவலிகொண்டு ஆகாயத்தி லெழும்பியவுடன, தனபெரிய தொருவாலறறுத் திடீரெனக் கீழேவிழுநது மூர்ச்சித்துப்போயினன. கணட இராமர், இலக்குமணர், சீதை முதலியோர் அனுமார் அகன மார்பகமேல வீழநது வாயவிட்டழுதயாநதனர். பினனொரு வாறு தெளிநது, அனுமாரை இராமர் தனது மலைபோனற தோளினமீது சாயத்துககொண்டு, “ மாருதிச்சிங்கமே! என செயவேன, எனசெயவேன்! பமபை நதிதீரத்திலெனைசசினேகித்தெனனயாவை மாற்றினை! சுக்ரீவனுக்கும் எனக்குஞ் சினேகஞ்செய்து வைத்தனை! கடலைககடநதனை! மைநாகப பருவதத்தை வீசியெறிந்தனை! அம்மலையரக்கி அலரவரக் கினை! இலங்காதேவியை இம்மென றுறினை! அசோகவனத்தினை ஆக்கிரமித்தழித்தனை! எண்பதினாயிர மரக்கரை மண்படசசாடினை! சம்புமாலியைச் சயம்பெறவாட்டினை! அட்சகுமாரனை அழிவுறயறைநதனை! இலங்கைமுழுதும் வெநதழல் மூட்டினை! இளமுலைச்சீதையை யென்பால் இன்பொடு சேர்த்தனை! ஆ! எனபொருட்டு இவ்வளவு பேருபகாரஞ் செய்த உனக்குப் பிரதியுபகாரம் நானென செய்தனன் ஒன்றுங்காணேன் குழந்தாய்! நின கண்ணைத்திறந்து என் முகத்

தின்னப்பார் அந்தோ, உன்னை எவ்வண்ணம் பிரிந்துய்வேன் என் கண்ணிற் கருமணியே!" என்றனர்.

இத்தகைய அமுத மொழிகள் அநிலகுமாரனாகிய அனுமன் செவியினுழைந்தவுடன், சிறிது சோபந்தீர்ந்து எழுந்து, இராமலிங்கத்தினுக்கு வடதிசையில் அனுமலிங்கந் தாபித்துப் பூசித்துத் தான், சர்வ வல்லபமாந் தன்மை பொருந்திய சிவபெருமான் மாட்டுச்செய்த அபசாரத்தினை யெண்ணியெண்ணி நெஞ்சந்துணுக்குற்று வருந்தி வாடுகையில், மகதியாழேந்திய ஞானசிரோமணியாகிய நாரதமுனிவர் அவணடைந்து, நடந்த யாவற்றையும் விசாரித்துக் கருணைகூர்ந்து கூறுவாராயினர்: "சஞ்சீவிராய நீ அம்பிகை பாகனுக்கியற்றிய அபராதமொழிய வேண்டுமாயின், கேட்பாயாக! எந்தப் புருடனாவன் சர்வசொரூபியாய சிவனை யறிந்து இலிங்கத்திற் பூசிக்கின்றானோ, அவன் செய்த பாவமனைத்தும் மன்னிக்கப்படும். திருமாலானவர், தனக்குப் பிருகுமாமுனிவர் சாபத்தாற் கிடைத்த பத்துப்பிறப்பும் உலோகோபகாரமாம்படி செய்துகொண்டது சிவலிங்கப்பூசையாலன்றோ? உனது நாயகனு மிரகுநந்தனுக்குண்டான பிரமகத்தி யொழிந்ததும் சிவபூசையாலென்பது நீ காட்சியி லோர்ந்தனையே ஆகலின், நீயுமங்ஙன மனமொடு இன்னே செய்யக்கடவை. அச்சிவலிங்கபூசை உத்தமதலங்களிலியற்றின், அது பலன் கரதலாமலகம்போற் கிடைக்கும். இது திண்ணம், முக்காலமும்

திணணம அறிவாயாக" எனககூற, அறுருறறழிநநிககிடக்கும அஞசனாதேவிததிருமகன, நாரதனை வணஙகிச சிவபூசைக்கு ரிய, அவ உததமதலம எதுவெனககேடக, மகதிமுனி அகம கிழநது, "சாவபகக்சன சதரு அரணம செயபவராகிய சிவ பெருமானுககுப பிரியமான தலஙகள இநநிலவுலகததின கணணநதமுணடு. அநததலஙகளுககுள, மணமலாசசோலை சூழநத திருவலிதாய க்ஷேததிரததைபபாாககிலும மேறபட டதலம எககாலததிலும எவவிடததிலுமிலலை. பெருமானுககு அததலமே பிரியமானது கணடாாமபோல விளஙகுநதண ணீாததுறைகளையுடைய அநத வலிதாயததிரு நகரததில கரு ணைவளளலாகிய சிவபெருமான றனனடியாா வேணடும வரங களை வேணடியபடியே விரைநது அளிததருளுவா. மநதி ரததலைமை பூணட பஞசாடசரததினைத தியானிததுப பச சிலையாலும பனிமலராலும பிளவுபடா பததியுடன பறிதசணிநது தொழுது துதிசெயவதே அநதப பரம சிவ ததிறகுப பரம சநதோஷம ஆதலின நீ அவவிடததிறகுப போய விபூதி உருததிராடச மணிநது பசுபதி நாயகனை யனபொடு பூசிதது வேணடிய வரஙகளைப பெறறுயவாயாக என்று உபதேசிததருளி ஆசிமொழி கூறி ஆகாயவழிபோயி னா. பின அனுமாா இராமனைவணஙகி, சிவபூசைசெய்ய விடைபெற்று நாராயண விருதய சபமநதிரமாகிய பஞசாட் சர நாவினராயத் திருவலிதாயததினை யடைநது, தன பெய ரால் ஒரு தீர்த்தங்கண்டு, அதிலாடிச் சிவசினனமபூணடு,

அன்பு மிகுந்து, ஆகமவிதிப்படி பூசைசெய்து, உணவுறங்கல முதலியவைகளை யொழித்து ஐம்புலனடக்கி நெடுங்காலந் தவஞ்செய்து கொண்டிருக்கும்போது, பொன்போல விளங்குஞ் சடைமுடியுடைய சிவபெருமான் மயிலிளஞ் சாயற்போன்ற மலைமகளுடன் பளிங்குமலைபோல விளங்கும் இடபத்தின் மீது காட்சி கொடுத்தருளக் கண்டு கைகூப்பித் தொழுது, "எம்பெருமானே, தேவரீர் மகிமைகளைப் பலதரம் எனது நாயகனாகிய இரகு நந்தனராற் கேட்டிருந்தும், சிறறறிவினனாகிய யானது அறியாது, அகம்பாவமுற்று நினைபாலியற்றிய அரிய அபராதத்தை சமித்தருளவேண்டும் சிவனே! பெருங்கருணைத் தடங்கடலாகிய பசுபதி! பார்வதீபங்கா!" எனவேண்டி, இன்னும் ஓர் வரம் வேண்டுகின்றான் வானரசிரேட்டனாந் தலைவன் அது யாதெனில்,—"அடியேன் பூசையைக் கொண்டருளிய இந்தப் பரமலிங்கத்தைப் பணிந்து வணங்கப் பெற்றவர்கள் கடல் சூழ்ந்த உலகத்தில் உள்ள இலிங்கங்களெல்லாவற்றையும் வணங்கிய பலன் அடையும்படி கிருபை புரிந்தருளவேண்டும். நானெடுத்த தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்பவர்கள் எத்தகைய இழிகுலத்திற் பிறந்தவரே யாயினும், எத்தகைய பாவம் செய்திருப்பவரே யாயினும் அவர்கள் செய்த குற்றங்களை மன்னித்தருள வேண்டும்' என்று வேண்டுதல் செய்ய, வேண்டுவார் வேண்டியதையே விரைந்து கொடுக்கும் கருணாநிதியாகிய கண்ணுதற்பெருமான்

அவ்வனுமானுக்கு வரமனைத்துங் கொடுத்தருளி உலகமாதாவா கிய உமையுடன் சோதி லிங்கத்தில் மறைந்தருளினார்.

அனுமாரபராத மன்னிப்புச் சருக்க முற்றிற்று.

## இராமர் தரிசித்த சருக்கம்.

சிவாக்கிரயோகிகளே! வானமைந்தனை மைந்தனாகிய அனு மானைமேவிய காதலி மருவுள காதலித்த திருவலிதாயத்தில் மிக்க காதல்கொண்டு, அத்தலத்தில் சிவபுராணஞ் சொல்லு கின்றவர்களையும், சொல்லச் சிரத்தையுடன் கேட்கின்றவர் களையும், அதனை வியந்து கொண்டாடுகின்றவர்களையும், சிவ னடியார்களை எதிர்கொண்டு சென்று அழைத்துவந்து அன்புடன் அமுதூட்டுகின்றவர்களையும், சிவபெருமானைப் பூசிக்குஞ் செயலையே மேற்கொண் டிருக்கிறவர்களையும், சிவ நாம முழக்கத்தினையுங் கண்டு சிவபெருமானுடைய பதத்தைப் பாதத்தூளிதத்தைக் கவசமாகத் தன்னுடலிற்றாங்கி அத்தலத் தினை விட்டுப்பிரிய மனமெழாது பலநாள் வாழ்ந்துகொண் டிருந்தகையில், கௌசலை மைந்தனாகிய இராமர் கந்தமா தனத்தை விட்டு அயோத்திக்குச் செல்லும்போது, பிறவித் துன்பங்களைப் போக்கிப் பேரின்பவீடு கொடுத்தருளுஞ் சிவ பெருமான் ஆட்சியில் விளங்குந் திருவலிதாயத்தினை யடைந் து, காமதகனனான கண்ணுதலைக் கண்ணாரத் தரிசித்து, அகண்ட சச்சிதானந்த கரீபூதனே சரணம், அவாங்கமனோ கோசரனே சரணம், இலயபோக வதிகாரஸ்தனே சரணம்

ஈசானதிசபதி வாமயார்த்தனே சரணம், உமாமகேஸ்வர மங்கள விகாசனே சரணம், ஊர்த்த தாண்டவ மூர்த்தியே சரணம், எல்லாம் வல்ல பரமசிவனே சரணம், எம்பெருமானே சரணம், அப்பனே சரணம் சரணம், ஐயனே சரணம் சரணம், அண்ணலே சரணம் சரணம், அரசே சரணம் சரணம் எனப் பல திருநாமங்களை யெடுத்துச் சொல்லி, அருச்சனை புரிந்து பேரின்பம் வரத் தொழுது பலதரம் பஞ்சாங்க அஷ்டாங்கமாகப் பணிந்து, வந்தனை வழிபாடு புரிந்து சில நாள் அவ்விடம் வாசஞ்செய்து, வேதத்தில் விளையாடும் விமலனது சிவானுக்கிரகம் பெற்று, அனுமனுக்குப் பல முகமனை கூறித் தன்னுடை மைழச்சுகளைக் கொண்டு அயோத்திக்குச் சென்றனர்.

இராமர் தரிசித்த சருக்க முற்றிற்று.

## அகத்திய ரத்தி யொழிந்த சருக்கம்.

சிவஞானத் தபோதனர்களே! கடலேழையு மொரு உழுந்தளவாக்கி யாசமனித்த முனி வேந்தனும் அகத்திய முனிவர், ஓர் காலத்தில் இமயமலையினின்றும் தென்றேயை நோக்கி வந்து கொண்டிருக்கையில், மாயையின் மகளாம் அசமுகியின் புத்திரர்களாகிய வில்வலன் வாதாவி யென்னுங் கண்டகர்களிருவருங் கண்டு, இம்முனிவரைக் கொல்ல வேண்டுமென்றெண்ணி, இளையோனாகிய வாதாவி யென்பவன் அஜவுருத்தாங்கி ஓர் காட்டில் மேய்ந்துகொண்டிருந்தனன்.

மூத்தோனாகிய வில்வலன் நெற்றியிற் றிருநீறும், காதினிற் குழையும், கண்டத்திற் கண்டமணியும், கரத்திற் றண்டு கமண்டலமும், அரையிற் கல்லாடையுந் தாங்கி முனிபோலுருக் கொண்டு குறு முனிமுன் வந்து, மூன்று தரம் பிரதட்ணஞ் செய்து அஞ்சலித்துச் சொல்லுவானாயினன். "மா முனிவரரே! தேவரீர் இவ்விட மெழுந்தருள அடியே னென்ன புண்ணியஞ் செய்தனன். மேலும், அடியேனைக் கிருதார்த்தனாக்கும் பொருட்டு ஏழையின் சிறு குடிசைக் கெழுந்தருளிப் போசனஞ்செய்து போதல் வேண்டும்" என்று அவரது திருப்பாதங்களில் தண்டாகாரமாய்ப் பணிந்து நின்றனன் தன்னிகர் விந்திய மலையின் செருக்கை யடக்கிய கும்பமுனியவன் வஞ்சகத்தை யறியாது சம்மதித்து அவன் பின் சென்றனர். உடனே வஞ்சக வேடம் பூண்ட தகாமுகித்தனையனும் வில்வலன் நீராடிச், சமையற் சாலையிற் புகுந்து சுத்தஞ் செய்து கோலமிட்டுச், சுத்தமான வரிசியா லன்னஞ் சமைத்து, பல பதார்த்தங்களுடன் றகருருவங்கொண்ட தன் றுணைவன் வாதாவியை யறுத்துப் பக்குவமாகக் கறி யாக்கித், தன் வேண்டுகோளுக்கிணங்கி வந்த முனிச்சிரேட்டரை யோராசனத்தி லெழுந்தருளச் செய்து உபசாரத்துடன் றூப தீபந்தந்து அறுசுவையாக வமைத்த வன்ன பானாதிகளுடன் அவ்வசமாய் சக்கறியினையும் படைக்க, ஐம்புலனவித்த அகத்தியராகிய சிவராசயோகர் அன்புடனே யுண்டு பசிதீர்ந்து எழுந்தருளி யிருந்தனர்.

அதன் பின், சூரமுதன் மருகனும் தண்ணளியற்ற வில்வலன் தென்றிசை சிறுவிய தென்றல் உலவும் பொதியார் சைலத்துப் பெருந்தகை யண்ணலாம் அகத்தியப்பருயிரை வாங்கக் கருதி, தம்பீ! வாதாபீ! வா விரைவுடனென்றனன். கொலைத் தொழிலையே தவமெனப் பூண்ட வம்பெருக்கும் படுபாவியாகிட வாதாவி, "அண்ணா வந்தேன் இதோ வந்தேன்" என்று, உலோபா முத்திரையின் கொழுநராம் அகத்திய ருதரத்தினின்று ஆட்டுருவங் கொண்டு வெளிவர உத்தேசித்த மாத்திரத்தில், மூன்று போதும் முழுதுணர் முனிவர் தெற்றெனத் தெரிந்து சிவசிவ என்று விண்பட்டுருவும் விந்திய மலையைத் தரைபட்டப் படுத்திய தன்றிருக்கரத்தால் வயிற்றினைத் தடவுதலும், வாதாவி யவன் கோத்தாவி விட்டுச் சீரணமாயினன். தம்பி மடிந்த சங்கதியைத் தெரிந்து துருவாச முனிக்கோனாலாங்கிய வில்வலன் தன்டோன்றேந்தி முனிவர் தலையில் மோத வந்தனன். சிருட்டியாதி தொழிற்களையு மியற்ற வல்ல அகத்திய முனிபுங்கவர் தன்னெதிருற்ற வொரு தருப்பையினை யெடுத்துச் சிவாஸ்திரமாகப் பாவித்துப் பிரயோகஞ் செய்து வில்வலனைத் * தடிந்தனர்.

---

* வில்வலன் இறந்தவிடம் - வில்வலன் வாக்கம்; இது - வில்லிவாக்கம் என வழங்குகிறது. இவ்விடத்திலேயே அகத்தியர் சிவலிங்கப் பிரதிட்டை செய்தது. வில்வலனையும் வாதாவியையும் கொன்ற விடம் 'கொண்ணூர்' என வழங்குகிறது. இவ்வூரில் வலிதாய நாதரை பூசித்த கேசவப்பெருமாளென்று வழங்குகிற தாமோதரப் பெருமாளாலயமுண்டு.

சிறிது நேரத்திற்கெல்லாம் வாதாபியும் வில்வலனும் நீண்ட கரிய மேகம்போலு முருவங்கொண்டு, மிக்ககோப முடையவராய் ஆரவாரத்துடன் அகத்தியர் முன் தோன்றினர். அது கண்டு முனிவர், 'துருவாச முனி மக்களிவர்கள். இவர்களைக் கொன்றமையால் பிரமகத்தி நம்மைச் சூழ்கின்ற' தென்றறிந்து, இதை யொழித்துக் கொள்ளும்பொருட்டு, அவ்விடத்தில் ஒரு சிவலிங்கம் பிரதிட்டை செய்து பூசித்த உடனே, தன் முன் வந்த சாயைகள் இம்மென மறைந்து விட்டன

பின்னர், அவ்விடத்தினின்று மெழுந்து சென்று, சம்பகத் திற றவஞ்செய்து கொண்டிருந்த பரத்துவாச முனிவரைக் கண்டு அவருடன் அளவளாவி, திருவலிதாய நாதர் மகிமைகளைத் தெரிந்து தரிசித்து வணங்கிக் கண்ணீர் சொரிந்து, ஆனந்தத்தா லாடிப்பாடி அழுது தொழுது நிற்க, சருவான்மாக்களையு மீன்ற இளமுலைக் கன்னி கௌரிபாகனாகிய வலிதாயநாதர் காட்சிகொடுத்து, 'அன்ப! நின்னைப்பீடித்தபிரமகத்தி யினி யுன்னை யணுகாது. நீ காசிப பொதிய மலைக்குப் போகக்கடவை' என்றனர். அகத்தியர் மீண்டும் வணங்கி, "பெரும! வில்வலனைக் கொன்றவிடத்தில் நான் பிரதிட்டித்த சிவலிங்கப் பெருமானுக்கு 'அகத்தீஸ்வரர்' என்று வழங்கவேண்டும். நானெடுத்த தீர்த்தத்தில் மங்களவாரம் ஸ்நானஞ்செய்து அகத்தீஸ்வரரை வணங்குகின்றவர்கள் பிணிகளையெல்லாம் ஒழித்துச்சிவஞானச் செல்வமளித்து ஆதரித்தருள வேண்டும்" என்றனர். பெருங்கருணை வள்ளலாகிய பரசி

யம் அவ்வரங்களைக்கொடுத்து, பரசிவையுடன் சிவலிங்கத்திற் கரந்தருளினார்.

அகத்திய ரத்தியோழிந்தசருக்க முற்றிற்று

---

## பிரமன் முத்தியடைந்த சருக்கம்.

சிவபக்த சிரோமணிகளே! சத்திய லோகத்திலே வாணி சமேதனாய் நவரத்தின மயமான ஓர் சிங்காதனத்தின் மீது நான்முகக் கடவுளெழுந்தருளி யிருந்து, ஓர்நாள் தனக்குள் தானே சிந்திப்பாராயினார், "நான் ஆண்டு கொண்டிருக்கும் இந்தச் சத்தியலோகம் உண்டாகி யழிந்ததற்குக் கணக்கு முண்டோ? அவ்வப்போது அவ்வுலகத்தினை யாண்ட பிரமன்களுக்குத்தான் கணக்கேது? அவர்களில் நானு மொருவன்றானே? என்றைக்காயினு நானும் இறந்துபோக வேண்டியது நிச்சயமென்றேற்படுகின்றது. ஐயோ! இத்தகைய அநித்திய தேகத்தை நிலையென நம்பி விஷயானந்தத்தில் மூழ்கி வீணாகக் கெட்டேனே! மோசம் போய்விட்டேன்! முக்கியமாகத் தேடிக்கொள்வதில் ஆசைப்பட்டேனில்லை. எத்தனை யோகாலம் விருதாவாகக் கழிந்துவிட்டது! அந்தக் காலங்களா லடைந்த பயனொன்றுங் காணேன். சீ, சீ! இதென்னவாழ்வு? இனியேனுஞ் சாக்கிரதையாக விராவிட்டால் மோசமாக முடியும். அந்தோ! மாயையின் சாலமே சாலம்! மாயையின் சொரூபத்தைச் சிறிதேனுஞ் சிந்தித்து நோக்காது

அம்மாயையிலே மயங்கி யுழன்றேன! அம்மம்ம! மாயா போகம் எவ்வளவு அனந்தத்தை விளைத்துவந்தது! இவைகளை யெல்லாம் உண்மையென நல்லவோ நம்பியிருந்தேன. மாயை எனக்கு அன்னியமென்றறிந்தும், அம்மாயையை நீங்கியிருக்க முடியவில்லையே அல்லது, மாயையாகவே நானிருக்கின்றேனோ வெனில், மாயை யொன்றுணை டென்ன, அதன் காரியங்களா ஞான் வேறாக விளங்குகின்றேனே! ஆ, ஆ! இந்த மாயை செய்வது இந்திரசாலமேயாம்! இதினின்று மீண்டாலல்லவோ உய்தியுண்டாம். இம்மாயையினைக் கடப்ப தெவ்வணம்! மாயை கொடிது! கொடிது! மாயை யொழிந்தாலல்லது பிறவி யொழியாதே! மாயையானன்றோ தேகம் இது கணைபோ லிடிந்து விழுந்து கரைந்து போகின்றது! அஞ்ஞானம் போவதற்கு முத்தியே யன்றோ நித்தியமான வொன்றைத் தேடிக்கொள்ள வேண்டும்! இம்மாயையினை நானே யொழித்துக் கொள்வதற்குச் சிறிதுங் கூடாதே! பிறரைக்கொண் டொழித்துக்கொள்ளலா மெனில், யாவரும் மாயா சகிதர்களாகவே காணப்படுகிறார்கள். அவர்களை நாடுவது குருடன் குருடனைத் தேடுவது போலாகும். மாயாரகிதனாயிருக்கிற வொருவனைப் பிடித்தாலன்றி பிது நீங்காது, நீங்காது. அங்ஙன மிருப்பவன யாவன? ஓ! ஓ! அவன் பிறப்பிறப்பில்லாதவனாக வனன்றோ விருக்க வேண்டும். அவ்வணம் விளங்குபவன யாவன? - அவனசாவ முகம் ஹவிர்திர் வியங்களுக்கும் போக்தாவாகி தகராகாச மத்யகத்தை வினிது

பிரகாசிக்கும் பரசிவப்பிரபு ஒருவரேயாம். இது சத்தியம், சத்தியம், சத்தியம் அப்பரமன் திருவடியினையே சரணமென அடைந்து உய்வதுதான் மேலான நலம். அந்தோ! இங்ஙனம் நினையாது கெட்டேன்! கெட்டேன்'' என்று திடமெனச் சிங்காதனத்தினின்றுங் கீழே குதித்துச் சத்திய லோகத்தைக் கடந்து, ஊழித்தோறுங் கும் கயிலாயகிரி யடைந்து, அவ்விடத்தில், பிருங்கியே முதலிய பதினெண் கணங்களும் பண்பொடு சூழவே கண்ணுதற் பெருமான் கருணையோடிலங்கு கனகக்கொட்ட கனக வாலயமும், அவ்வாலயத்தின் திருவாயிலிலே யினிதமரும் சண்டுமாயலங்கலாதிப் பலவகை மணமருவித்தார் எண்டிசை மணக்கு மெழிலுடை வேத்திர நற்படையினையை நலம் பெறத்தாங்கிய சிலாதமுனி நயந்தளித்ததோர் மகவாஞ் சிவம் பெற வந்த திருநந்தி தேவும் இருக்கக்கண்டு பிரமன், அந்நந்தியெம்பெருமான் திருவடிகளை வணங்கி விடை பெற்றுத் திருக்கோயிலுள்ளே சென்றான். அவ்விடத்தில், நாரணன் முதலிய தேவர்கள் நலம் பெறத் துதிக்கவும், கணநாதர்கள் சவரி விரட்டவும், கிம்புருஷ காந்தருவ ராதிகள் கீதங்கள் பாடவும், அட்ட வித்தியேசுரர் அட்டமங்கலந் தாங்கவும், முனிவரரனேகர் அரகர சிவ சிவ வென்றடி போற்றவும், அரம்பையாதியர் ஆடிப்பாடவும், சிவயோகிகள் சிவானந்த மேவவும், திருவருண் மழை பொழியவும் பச்சிளங் கொடியாகிய பார்வதி தேவியாருடன் எழுந்தருளி யிருக்கும் செம்பளவம்போற் சிவந்து விளங்கும்

சடாமுடியையுடைய சந்திர சேகரனைத் தனனிருநானகு கண்களுங் களிப்பக்கண்டு, அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பணிந்து, வந்தனை வழிபா டியற்றி, "ஏரிரு முனிவா இனிப்போடு தேர் இரும பெருஞானம இசைவுடன் சொன்ன வித்தக முதல்வ! வினையேன பரிபவமிங் கூறுவன கேண்மோ" வென்க் கைகூப்பி அதிவினயத்துடன சொல்லுவானாயினன வாணிகேள்வன.

"தவள மிடணிந்த கணணளியுடையோய! துன்பந்திற கேதுவாகிய வெனது சிருட்டித் தொழிலில அடியேனுக்கு அளவளவாயினு மாசையிலலை. விட்டுணு வாதி பெரியோர்கள வியனபதவியிலுமு விருப்ப மிலலை. சத்தியவதீலை புணர்ந்து சதானந்த முத்தியடைவதறகே முழு ஆவலுடையவனாயிருக்கினறேன" என்று கசிந்துப் பததி யழுதனன அவன பக்குவததினை பார்த்துக கைலாயபதி, "கேளாய பிரமனே, நீ கொண்ட வெண்ண மிக வுத்தமமானதே. அமமுத்தி நிலைக்குக் தவநிலையே சாதனமாம, அத்தவநிலை சிவதலங்களிற செய்யின சீக்கிரம் பலனுண்டாம; போக போக்கியஙகளைக கொடுக்குந தானத்தாலும் சருமத்தாலும் கிடைப்பதனறு. ஆகலின், கடல் சூழுந்த வுலகத்திற் சத்த புரங்களி லொன்றான காஞ்சிமா நகரத்திறகு வடகிழக்கில, விருத்த க்ஷீர நதி தீரத்திலுள்ள வலிதாயத்தை யடைந்து, தவமுஞற்றி வருவாயாயின் உன்னிஷ்டஞ் சித்தியாகும்" எனத் திருவாய மலர்ந்தருளினர்.

பின், நாரண னுந்திவந்தோனாகிய நளின மலராசனாகிய
பிதாமகன் பெருமானிடத்தில் விடைபெற்றுக் குடிலையோர்
வடிவினை நிகரெனக் காட்டுங் கோனமைமா மலர் மணமெங்
கணும் வீசும் விண்டொடு மதில்சூழ் வலிதாயமதனையடைந்து, அவ்
ணுறும் ஆலயத்திற்கு மேற்றிசையின்கண் தன் பெயரால் ஓர்
தீர்த்தமுண்டாக்கி, நீராடித் தென்றுளிக்கும் நிழலில் வீற்றி
ருந்தருளும் வலிதாய நாதரைத் துதித்து, அன்பு மிகுந்த அரு
ச்சனை செய்து, அருந்தவஞ் செய்யச் சங்கற்பித்துப் பவரோக
நிர்மூல வருமருந்தாகிய திருநீறு பூசி உருத்திராக்ஷ மாலை
தரித்து, சந்திரசேகரப்பெருமானுக்குரிய சத்வுருத்திர மந்திர
த்தைச் செபித்துக் கனி பட்சணம், சருகு பட்சணம், சலபட்
சணம், வாயுபட்சணம் செய்பவனாகி, மோட்ச விதாயமாகிய
பஞ்சாட்சரத்தினைக் கணித்து, இதயாரவிந்தத்தி னடுவிலே
அம்மையப்பனை யமர்ந்தருள வைத்துப் பஞ்சாக்கினி மத்தியி
னின்று அகோரமான அருந்தவமுஞற்றுவானாயினன

இவ்வாறு நெடுங்காலங் கமலவேந்தன் கடுந் தவஞ்செய்து
கொண்டிருக்கையில், திரிநேத்ர தாரியாகிய சிவபெருமான்
இலிங்கத்தினின்று மாவிர்ப்பவித்துக் காட்சிகொடுத்தருளின
ர். நான்முகன்றன்னிரு கண்களு நலம்பெறத் தரிசித்து.
அருட்பெருங்கடலே. அமுதசாகரமே அடியேனை யாண்டரு
ளும், அனாதி மலமுத்தனே! ஆணவத்தா லழிந்தேன், மாயா
ரகிதனே! மாயையால் மயங்கினேன், காமனை யெரித்தோய!

காமந்தார கலங்கினேன், சிவனே! சிவனே! இனி யுன்பாதமே கதி; இனி யெக்காலத்தும் பிறவாத வரமும், இந்தத்தீர்த்தம் பிரமதீர்த்தமெனவும், இத்தலம் பிரமபுரி யெனவும், வழங்கி வரவும் கிருபை செய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க அருட்பெரும் வள்ளலார் மாலினருங்கண்டோன் அவ்வரங்களுடன் அயனுக்குச் சிவகணங்களுக்குத் தலைவனுமுயர்பதவியையுங் கொடுத்தருளிச் சோதிலிங்கத்திற் கரந்தருளினர்.

**பிரமன் முத்தியடைந்த சருக்க முற்றிற்று.**

---

## திருவிழாச் சருக்கம்.

சிவபஞ்சாக்கிரநாவினர்களே! காவேரி நதியினைத் தனக கங்கமாகவுடைய பொன்னிநாட்டினை யரசாட்சி செய்து வந்த விக்கிரமச் சோழனென்னும் அரசனது சபையில் ஓர் நாள் வைதீக சைவ சித்தாந்த செல்வராகிய ஓர் சிவனடியாரெழுந்தருளினர். அரசன் அவ்வடியாரைத் தரிசித்தவுடன் எழுந்து வணங்கி விபூதி யேற்று உபசரித்துச் சொல்லுவானாயினன் சுவாமீ! அடியேன் அநந்த கல்யாண குணபரிபூரணரான சிவபெருமான் திருவருளால் பொன்னுலகத் திந்திரனைக் காட்டிலு மிக்கச் செல்வத்தினை யனுபவித்து வருகிறேன். அங்ஙனமிருந்தும், புத்திரப்பேறென்றின்மையினா லுண்டாயிருக்குஞ் சஞ்சலம் அதிகமாயென்னை வாட்டுகின்றது. அல்லும் பகலும் நித்

திரையினறி யேங்குகின்றேன. தேவரீர தயைபுரிந்து ஏழை யேன கவலை நீங்கும வணணம் ஒரு சூட்சி சொலலவேண்டு மென்று இரந்தனன. சிவனடியார அரசனை நோக்கி, "ஐய! இதோ என்பால் புண்ணிய ரூபமான 'க்ஷேத்திரக் கோவை' என்னு மோர்நூலிருக்கின்றது. இனறு சோமவாரமா யிருத்தலின இதனை யனபுடனே பூசித்துக்கயறு சாத்திப்பாரபையே ல், அதி லெந்தப்புண்ணியத்தலங் காணபபடுகிறதோ, அத்தல திறகுச்சென்று அங்கெழுந்தருளியிருக்கும் உமாநாத சர்வ திவ்ய மங்கள விகரகத்தினைப பூசிப்பையேல புத்திரபபேறுண டாம் எனறனர். அஙஙனமே அரசன கயறு சாத்தலும 'திரு வலிதாய க்ஷேத்திரம்' வரககணடு அளவிலா மகிழ்ச்சியடை ந்து, அத்தலத்தினை யிபபோதே தரிசிக்க வேண்டுமெனறு பே ராசையுறறுத் தன் தரசினை யமைச்சரபா லொப்புவித்துத் தன் துகறபினிற்சிறந்த மனைவியுடன் வெளிப்பட்டுத்திருவலிதாயத் தினையடைந்து, தீர்த்தமாடி ஆலயத்துட்சென்று சிவார்ச்சனை புரிந்து, கண்குளிரத்தரிசித்துத் துதித்து வணங்கி அப்பாற் போந்து உலகமாதாவாகிய தாயமமையைப் பூசித்துக் குறை யிரந்து நிறக, அம்மையார திருவுளமிரங்கிப் புத்திர சந்தான முண்டாகும்படி வரந் தந்தருளினர். அவ்வரம் பெற்றவரசன் மனமகிழ்ந்து மீட்டும் வணஙகி விடைபெற்றுப் புறமபோந்து ஓராண்டளவும் சிவபுண்ணியங்களைச் செய்துகொண்டிருந்து மதில்கள், மண்டபங்கள், கோபுரங்கள், மடவளாகங்கள், மாட வீதிகள் உண்டாக்கிப் பின்ன ரொருநாள் திருவிழா நடத்தத்

தொடங்கினன். அரசன் கட்டளைப்படி ஆதிசைவர்கள் எண்ணி றந்த திருவாபரணங்களையும் பீதாம்பரங்களையும் பெருமானுக் கு அணிந்தனர். எங்கணுந் தோரண நாட்டினர். நவரத்தின மிழைத்த தம்பங்களில் வாழை கமுக முதலியவை கட்டினர். பூப்பந்தர்கள் சந்திகளிற் றூக்கினர். வீதிகளிற் கோலமிட் டனர். சித்திரை மாதத்திற் பூர்வ பக்கத்தில் புனர்பூச நட் சத்திரத்தில் கொடியேற்றிப் பல விழாவாற்றி, முதனாள் முதல் பத்துத்தினங்கள் வரையில் பற்பல வாகனங்களிலே ஏறி ஆனைமுகன் ஆறுமுகன் சண்டேசன் அம்மையாருடன் அரனாருக்குத் திருவிழா வாரம்பித்து, காலையில் வீதிவலம் வந்தபின்னர், இரவில் மறையவர் வேதபாராயணஞ் சொல் லவும் குங்கிலிய தூபமெங்கும் வீசவும், அடியார்கள் நாமா வளி கூறவும், வெண்குடை நிழற்செய்யப் கவரி ஆலவட்டம் யாந்தாற்றி நெருங்கவும், கொடிகள் தாங்கவும், எள் விழுந்தற விடமின்றிப் பலர் சூழ்ந்தனர். சூரியன் சந்திரன் நட்சத்தி ரம் யானை சிங்கம் போன்ற ஏவாதிகள் முன்னும் பின்னும் மேளக, பேரிகையாழ், சைப்படகம், பறை, முரசு, குடமு ழவு, சின்னம், பூரி, எக்காளம், சங்கம், தாளம், தண்ணுமை முழங்கவும் வெளிவந்தனர், வீதிதோறுங் கும்ப மமைத்த னர் வேதியர்கள் அட்டமங்கலத்துடனே தட்டுக்களில் தேங் காய் தாம்பூலம் கர்ப்பூரத்துடனே வந்து தீபாராதனை செய்யவும், சில வடியா ராடவும், சில வடியார் பாடவும், அரி பயற்கரியோன் வந்தான், அன்பருக்கெளியான் வந்தான்,

இருக்கினிலிருப்போன் வந்தான், மறையினில் மறைந்தோன் வந்தான், வலிதாய நாதன் வந்தான், தாயுமமைத்தலைவன் வந்தான் என்று தோத்திரிக்கவும், இத்தகைய ஆடம்பரத்துடன் மாடவீதி வலம்வந்து தூலலிங்கமாகிய கோபுரவாயிலையடைந்தவுடன், ஆதிசைவர் நிவேதனத்துடன் தீபாராதனைக்காட்ட, உருத்திரகணிகைகள் தாளவிசை மருவிய நடனமுடன் ஆலத்திசுழற்றி எச்சரிக்கை சோபனம் பாடினர், நந்தியெம்பெருமான் முன்னேக ஆலயத்துட் பிரவேசித்துப் பெருமானெழுந்தருளினன். இவ்வகையாகப் பத்துத்தினங்களும் பல வாகனமும் பல விமானமும் தேர் முதலிய மீதிற் கொண்டாடித் தீர்த்தமாடி, அடுத்தநாள் மவுனபலிதூவி, பிற பூசையுஞ்செய்து இடபக்கொடியை யிறக்கினர். அரசன் இத் திருவிழாக்களில் அனேக பூதானம், வர்ணதானம், அன்னதான முதலியசெய்து திருவலிதாய நாதனைத்தரிசித்து விடைபெற்றுக்கொண்டு தனது நகரத்தினையடைந்து, புத்திரப் பௌத்திரர்களை வாய்ந்து, தெய்வங்கட்குத் தெய்வமாகிய திருவலிதாயநாதனது கலியாணசுந்தர முதலிய குணங்களையே சிந்தனைசெய்து கொண்டிருந்து சுகமாக வாழ்ந்து வந்தனன்.

திருவிழாச்சருக்க முற்றிற்று.

---

# தீர்த்த மகிமைச் சருக்கம்.

## பரத்துவாச தீர்த்தம்.

மனமடங்கப் பெற்ற மாதவர்களே! மும்மலங்களையும் போக்கி முத்தி செல்வங் கொடுத்தருளுந் திருவலிதாயத்துச் சிவாலயத்தின் றென்றிசையிலுள்ள பரத்துவாச தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யப்பெற்றோர் புண்ணியத்தை யடைவாரென்பதிற் சந்தேக மில்லை. அத்தடாகத்திலேயே சூரிய வெப்பத்தா லொருகாலத்தில் தண்ணீரில்லா விடினும், வேறு சலங்கொண்டு வந்து அவ்விடத்தில் விட்டுப், பின் அத்தீர்த்தத்தை யெடுத்து உட்கொள்ளினும், சிரசின் மேற் பரோட்சித்துக் கொள்ளினும் உலவாவரும் பெருமணி பொன்னிதியையும், போக முப்போதும் விளையு நன்னிலங்களையும், நற்குண நற்செயலுற்ற நன் மனைவியையும், நல்லறிவுடையோரா நன் மக்களையும், பௌவர்க்கமும் பல்கலை ஞானத்தையு முத்தியையும் பெறுவார். அத்தீர்த்தத்தில் விருச்சிக மாதத்திலே சோமவாரத்தில் சூரியோதயமாகும் போது ஸ்நானம் செய்பவர் பின்னோர் பொழுது பிறவிக்கடலில் மூழ்கார். அத்தீர்த்தத்தில் அமாவாசையில் தத்தம் பிதுர்க்களுக்குத் தருப்பண மொருவன் செய்வானாயின், அவன் பிதுர்க்கள் கண்ணுதலுறையுங் கயிலாய மதடைந்து நித்தியானந்த பரசுக மெய்தப் பெறுவ ரென்றறிவீர்.

## அனும தீர்த்தம்.

பற்றற்று விளங்கும் பரம ஞானிகாள! இகபர சுகங்களைக் கொடுக்கும் வலிதாய நாதனாகிய சிவபிரான் திருவோலக்கங் கொண்டெழுந்தருளிய ஆலயத்தின் குணதிசையிலுள்ள அனுமதீர்த்தக்கரையிலிருந்து சற்பாத்திரமாயுள்ள சிவனடியா ரொருவருக்கு ஓர் கவள அன்னமேனும் இடுவாராயின், அவ னெக்காலத்தும் வெள்ளியங்கிரியை விட்டு நீங்காத நல்வாழ்வு பெறுவான். மகா பாவிகளாயினும், இழிந்த குலத்திற் பிறந் தவர்களாயினும் இந்தத் தீர்த்தத்தில் அடைவுடன் ஆடப் பெற்றவர்கள் அவர்கள் குற்றங்களினின்றுங் கறையேறுப தன்றி, அறம் பொருளின்பம் வீடென்னப்படும் புருடார்த்த நான்கினையும் பெறுவர்.

## பிரம தீர்த்தம்.

தத்துவ ஞானத்தபசிகளே! மலிதரு பிறவித்துன்பத் தனைப் போக்கி மாண்பெறு முத்தி யின்பத்தைக் கொடுக்கும் திரு வலிதாயத்தின் குடதிசையில் பிரம தீர்த்த மொன்றுளது. அத்தடாகக்கரையில் உத்திராயண தட்சிணாயனங்களிலும், சூரிய சந்திர கிரணங்களிலும், அமாவாசை பருவங்களிலும், விதி பாதத்திலும் மாதப்பிரவேசங்களிலும், மாலய பட்சத்திலும் மற்றைய புண்ணிய காலங்களிலும் சிராத்தஞ் செய்யின் அதற் புண்ணியத்தினுக்களவே கிடையாது. அன்றியும், இரத் தினங்களேனும், பொன்னேனும், பூஷணமேனும், வஸ்திரமே னும், பொருளேனும் இந்தத் தீர்த்தக்கரையிற் சிவனடியார்

களுக்குத் தானஞ்செய்யின், இம்மையிற் பெருகுஞ் செல்வத்துடன் வாழ்ந்து, பின்னர் மறுமையிற் கிடைக்குஞ் சிவானந்த சாகரத்தின் மூழ்குவர்.

பாச வைராக்கியப் பாக்கிய வான்களே! மணமது மருவிய பூவினா விழுமணி மலர்ச்சோலை பாங்குடன் சூழ்ந்த விப்பிரம தீர்த்தத்தினைப் பயந்தப்புகழ் பெறற்குரிய அகத்திய தீர்த்த மொன்றுளது, காண்பீர். இதில் படிந்தவர்கட்கே யல்லாமல், இந்நீரினை அருந்திய சேயங்களுக்கு ஒழுக்கத்துடன் கொண்டு போய் அன்புடன் முழுகுவோர்க்கும் மிக்க புண்ணிய முண்டாகும். இவ்வரிய தீர்த்தத்தின் உதவியால் முளைக்கும் புற்கொடி மரமாதிய வசேதனப் பொருளும் மோட்ச மடையுமெனில், இகபர சாதனங்களை நன்குணரும் சேதனராகிய மானுடர்கள் வீட்டை யடைவரென்பது அதிசயமாமோ! கூறுவீர்.

முத்தி செல்வத்திற்குரிய முனிவர்காள்! திருவலிதாயமாகிய பிரமபுரியை யடுத்த விருத்தக்ஷீர நதியினீரிலே ஏலம் இலவங்கம், விலாமிச்சு முதலிய வாசனைத்திரவியங்களைக் கலந்து நூறுகுடங்கொண்டு வலிதாயநாதனுக்கு மகாபிடேகஞ்செய்பவர் கல்வியறிவில்லாதவர் கல்வியறிவெய்தப் பெறுவர், பொருளில்லாதவர் பொருள்கிடைக்கப் பெறுவர்; இடமில்லாதவர் இடமணுகப்பெறுவர்; விவாகமில்லாதவர் விவாகங்கூடப்பெறுவர்; புத்திரப்பேறில்லாதவர் புத்திரப் பேறெய்தப்பெறுவர்; ஆயுளில்லாதவர் தீர்க்காயு ளடையப் பெறுவர்; இதுமுதலாகிய வைஸ்வரியங்கள் பலவும் யினி

டைந்துய்ந்து, பின் திருக்கயிலாயஞ்சேர்ந்து சிவசொரூப முற்றுப் பேரின்பமெய்தப் பெறுவர்.

நஞ்சமர் நீல கண்டனுக்குகந்த நைமிசாரணிய மாதவ முனிவீர்! பிரணவாகாரமாகிய பூக்கள் நிறையப்பெற்ற கொன்றைமரத்தி னிழலிலே, தாயம்மை சமேதரா யெழுந்தருளி யிருக்கும் வலிதாயநாதனின் சிறப்புப்பொருந்திய மான்மியத்தினை, நாஞ்செய்த முற்றவப்பயனாலின்று ஓதவுங் கேட்கவும்பெற்றோம். நாஞ்செய்த தவமன்றோ தவம்! இம்மான்மியத்தினைத் தத்தம் வீடுகளில் சோமவார முதலிய புண்ணிய தினங்களில் அன்பினுடனே படிப்பவரும், அதனைக்கேட்போரும், இம்மையிலே தாம்விரும்பிய புத்திர பௌத்திர களத்திராதிகளுடனே சகல வைஸ்வரியம் பெற்றுவாழ்ந்து, மறுமையிலே சிவபெருமானது திருவடிநிழலில் வீற்றிருந்து பரமானந்த சுகம்பெறுவரிது சத்தியமென்று கூறியருளினர் நற்சூதமாமுனிவர். சுபம்.

## தீர்த்தமகிமைச்சருக்கம் முற்றிற்று.

வாழி.

போற்றிநின்ற கொன்றைமூலத்தொளிரும் வலிதாயப் புனிதன் வாழ்க, சாற்றரிய கருணையுரு வாகியெழுந் தாயம்மை சால வாழ்க, வேற்றதிரு நீறுமணி பைம்பதமிவ் வுலகமெலா மிலங்கி வாழ்க, தேற்றிடுமை தீக்ஷித் தாந்தசைவப்பேறே சிறந்து வாழ்க.

## திருவலிதாயப்புராண முற்றிற்று.

களுக்குத் தானஞ்செய்யின், இம்மையிற் பெருகுஞ் செல்வத்துடன் வாழ்ந்து, பின்னர் மறுமையிற் கிடைக்குஞ் சிவானந்த சாகரத்தின் மூழ்குவர்.

பாச வைராக்கிய பாக்கிய வான்களே! மணமது மருவிய பூவிணா விழுமணி மலர்ச்சோலை பாங்குடன் சூழ்ந்த விப பிரம தீர்த்தத்தினைப் யடுத்ததுப்புகழ் பெற்றோங்கும அகத்திய தீர்த்த மொன்றுளது, காணபீர். இதில படிந்தவர்கட்கே யல்லாமல, இந்நீரினை அந்நிய தேயங்களுக்கு ஒழுக்கத்துடன் கொண்டு போய அன்புடன் முழுகு வோர்க்கும மிக்க புண்ணிய முண்டாகும் இவவரிய தீர்த்தத்தின உதவியால முளைக்கும புறகொடி மரமாதிய வசேதனப் பொருளும மோட்சமடையுமெனில, இகபர சாதனங்களை நன்குணரும் சேதனராகிய மானுடர்கள் வீட்டை வரெனபது அதிசயமாமோ! கூறுவீர்.

முத்தி செல்வத்திறகுரிய முனிவர்காள்! திருவலிதாயமாகிய பிரமபுரியை யடுத்த விருத்தக்ஷீர நதியினீரிலே ஏலம் இலவங்கம, விலாமிச்சு முதலிய வாசனைதிரவியங்களைக் கலந்து நூறுகுடங்கொண்டு வலிதாயநாதனுக்கு மகாபிடேகஞ்செயபவர் கலவியறிவில்லாதவர் கல்வியறிவெய்தப் பெறுவர்; பொருளிலலாதவர் பொருள்கிடைக்கப் பெறுவர்; இடமில்லாதவர் இடமணுகப்பெறுவர்; விவாகமில்லாதவர் விவாகங்கூடப்பெறுவர்; புத்திரபபேறிலலாதவர் புத்திரப் பேறெய்தப்பெறுவர்; ஆயுளில்லாதவர் தீர்க்காயு ளடையப் பெறுவர்; இதுமுதலாகிய வைஸ்வரியங்கள் பலவும் யினி

டைந்துய்ந்து, பின் திருக்கயிலாயஞ்சேர்ந்து சிவசொரூப முற்றுப் பேரின்பமெய்தப் பெறுவர்.

நஞ்சமர் நீல கண்டனுக்குகந்த நைமிசாரணிய மாதவ முனிவீர்! பிரணவாகாரமாகிய பூக்கள் நிறையப்பெற்ற கொன்றைமரத்தி னிழலிலே, தாயம்மை சமேதரா யெழுந்தருளி யிருக்கும் வலிதாயநாதரின் சிறப்புப்பொருந்திய மான்மியத்தினை, நாஞ்செய்த முற்றவப்பயனாலின்று ஓதவுங் கேட்கவும்பெற்றோம். நாஞ்செய்த தவமன்றோ தவம்! இம்மான்மியத்தினைத் தத்தம வீடுகளில் சோமவார முதலிய புண்ணிய தினங்களில் அன்பினுடனே படிப்பவரும், அதனைக்கேட்போரும், இம்மையிலே தாம்விரும்பிய புத்திர பௌத்திர களத்திராதிகளுடனே சகல வைஸ்வரியம் பெற்றுவாழ்ந்து, மறுமையிலே சிவபெருமானது திருவடிநிழலில் வீற்றிருந்து பரமானந்த சுகம்பெறுவரிது சத்தியமென்று கூறியருளினார் சூதமாமுனிவர். சுபம்.

## தீர்த்தமகிமைச்சருக்கம் முற்றிற்று.

### வாழி.

போற்றிநற் கொன்றைமூ லத்தொளிரும் வலிதாயப் புனிதன் வாழ்க, சாற்றரிய கருணையுரு வாகியெழுந் தாயம்மை சால வாழ்க, வேற்றதிரு நீறுமணி யைம்பதமிவ் வுலகமெலா மிலங்கி வாழ்க, தேற்றிடுமிவ்வை தீகசித் தாந்தசைவப்பேறே சிறந்து வாழ்க.

## திருவலிதாயப்புராண முற்றிற்று.